உ

சிவமயம்.

சோமசுந்தரக்கடவுள் [illegible]

# திருவிளையாடற் சரணமஞ்சரி.



---

## பள்ளத்தூர்

திருவாளர்



## அ. மு. ப. அ. மு.

## முருகப்ப செட்டியார்,

இயற்றியது.

---

ஸ்ரீமுக ௵ சித்திரை ௴ ௧௪ ௳



---

உ

சிவமயம்.

சோமசுந்தரக்கடவுள் துணை.

# திருவிளையாடற் சரணமஞ்சரி.





## பள்ளத்தூர்

திருவாளர்

## அ. மு. ப. அ. மு. முருகப்ப செட்டியார்,

இயற்றியது.



ஸ்ரீமுக ௵ சித்திரை ௴ ௰௯ உ

Printed by

Sri Raman Press, Pallatur.

1933.





சிவமயம்.

# சாற்றுக்கவிகள்.

மகிபாலன்பட்டி
திருவாளர் பண்டித மணி
மு. கதிரேசச் செட்டியாரவர்கள்
இயற்றியது.

---

## ஆசிரிய விருத்தம்.

திருவால வாயிறைவன் திருவிளையா டற்கதையைச்
செவ்வ னுய்ந்து
குருவாரும் பத்திநலங் கூர்சரண மஞ்சரியைக்
குலவச் செய்தான்
தருவாரும் பள்ளத்தூர்த் தனவணிக குலத்தருண
சலவே டந்த
திருவாளன் கல்விநலந் திகழ்மதியான் முருகப்பச்
செல்வன் மாதோ.

---

பூசாரிக்கவண்டன்பட்டி திருவாளர்

## ச. திருமலைவேற்கவிராயரவர்கள்

இயற்றியவை.

---

## ஆசிரிய விருத்தம்.

---

பாயதிரைக் கடலமுத நாவினுக்கே யினிக்குமியற்
பாவல் லோர்க்குத்
தாயனைய முருகப்ப வேண்மதுரைச் சொக்கேசன்
றன்மேற் சொன்ன
மேயசெழுந் தமிழ்ச்சரண மஞ்சரியா மமுதநா
வினுக்கி னிக்குந்
தூயசெவிக் கினிக்குமன தினுக்கினிக்கு மிதன்பெரு
சொல்லற் பாற்றே. [மை

---

## வெண்பா.

---

தேனே கனியோநற் சீனியோ கற்கண்டு
தானே வமுதோ சருக்கரையோ—வானோர்கள்
மெய்த்துதிசெய் சொக்கர்மிசை மிக்கமுரு கப்பமுகில்
பத்தியொடு செப்புதமிழ்ப் பா.

---

பூசாரிக்கவண்டன்பட்டி
திருவாளர் பண்டித தி. சங்குப்புலவரவர்கள்
இயற்றியவை.

---

## ஆசிரிய விருத்தம்.

சகத்திலுயர் மதுரையரன் புரிந்ததிரு விளையாடற்
சரிதம் யாவும்
அகத்திலினி துணர்ந்துதெளிந் தெங்கள்முரு கப்பவள்ள
லன்பு கூர்ந்து
மகத்துவஞ்சேர் தமிழ்ச்சரண மஞ்சரிசெப் பினன்பவ
மாறி யுய்வான் [நோய்
இகத்திலுல கினர்க்கிதுவோ ருமருந்தென் றறிஞர்
தியம்ப மன்னே [புகழ்ந்

---

## வெண்பா.

எப்போதும் வாடா தெழில்சிறிதுங் குன்றாது
தப்பா துலகமெங்குந் தான்மணக்கும்—எப்பாரும்
ஏத்துமது ரேசன்மிசை யெங்கள்முரு கப்பவள்ளல்
சாத்துதமிழ்ப் பாமஞ் சரி.

---

மேலைச்சிவபுரிச் சன்மார்க்கசபைத் தலைமைத்

தமிழ் ஆசிரியர் திருவாளர்

# மு. அருணாசலம் பிள்ளையவர்கள்

இயற்றியது.

---

## ஆசிரிய விருத்தம்.

மருவிளையா டற்காத்து வளர்பள்ளத் தூர்வாழும்
வணிகச் செம்மல்
பொருவிளையா டற்குலிசப் புரந்தரனேர் முருகப்ப
புனிதன் சொற்றான்
கருவிளையா டற்பூத்த காட்சிநிகர் கயற்கண்ணி
கணவன் செய்த
திருவிளையா டற்சரண மஞ்சரியஃ திசைபெருகத்
திகழ்க மன்னோ.

---

தூத்துக்குடி திருவள்ளுவர் நிலையம்

திருக்குறட் குமரேச வெண்பா ஆசிரியர்

## திருவாளர்

## ஜெகவீரபாண்டியன் அவர்கள்

இயற்றியது.

---

## ஆசிரிய விருத்தம்.

அருவுருவா யுயிர்க்குயிரா யமர்ந்தருளும் பரம்பொருளி
னருளா மெண்ணெண்
திருவிளையாட் டெனுமமிழ்தைத் திரட்டியறி வாலருந்
தேர்ந்து பின்னும் [தித்
மருளறவுண் டெல்லாரு மாருத பேரின்ப
மருவத் தந்தான்
திருமலியுங் குலவணிகன் முருகப்ப னெனும்பெயர்
செல்வன் மாதோ. [கொள்

---

சிவமயம்.

அண்ணாமலையார் துணை.

# முகவுரை.



உலகத்திலுள்ள சராசரப்பொருள்களையும் படைத்தளித்தழிக்கும் பரம்பொருளாகிய சிவபிரான்; மானிடருய்யும் பொருட்டு, பலதலங்களுட் புரிந்த திருவிளையாடல் எண்ணிறந்தன. அவைகளில் மதுரைமாநகரிற் புரிந்த திருவிளையாடல் அறுபத்து நான்கு. அவைகளே திருவிளையாடல் எனப் பெயர் பெற்றன. அத்திருவிளையாடலைப் பரஞ்சோதி முனிவரும், பெரும்பற்றப் புலியூர் நம்பியும் புராணமாகப் பாடியுள்ளார். அப்புராணம் பூசைக்குரியதாகத் தொண்டர் பலருங் கொண்டாடி வருகின்றனர். அவர்கள் ஒவ்வொரு தினங்களிலும் அப்புராணங்களுட் சில கவிகளை மாத்திரம் கூற முடியுமே யன்றி கவிமுழுவதுங் கூறிப் பூசைமுடித்தல் இயலாதன்றே? ஆதலால் பூசைக்குரியதாகும் வண்ணம் சுருக்கமாகவும், எளிதிற் பொருள்விளங்கும்படியும் அகவற்பாவிற் பாடி வெளியிடலானேன். அன்பர்கள் பயின்று இன்புறுவார்களாக.

நடனவிலாசம்
பள்ளத்தூர்

அ. முருகப்பன்.

உ

சிவமயம்.

சோமசுந்தரக்கடவுள் துணை.

# திருவிளையாடற் சரண மஞ்சரி.



## காப்பு.

## வெண்பா.



ஆதிமது ரேசன்விளை யாடலறு பானான்கும்
ஓதிமிக வேதுநிக்க வோர்துணையாஞ்—சோதிதிகழ்
சக்கரத்தா னாதிவிண்ணோர் தாம்பணியு மங்குசபா
சக்கரத்தான் கஞ்சமலர்த் தாள்.

## நூல்.

### நிலைமண்டில வாசிரியப்பா.

திருவளர் மணிமுடித் தேவர்கள் போற்ற
மருவளர் கற்பக மாநிழல் வைகிப்
பொன்னுல காளும் புரந்தரன் முன்னாள்
துன்னுபோர் விருத்திரா சுரனைக் கொன்ற
வன்பழி மாற்றியவ் வாசவன் பூசையும்
அன்புட னேகொண் டாண்டவா சரணம். 1

முனிவன் சாப மூண்டத னாலே
யினியென் செய்வ தென்றெழு புவியும்
அலைந்து திரிந்த வயிரா வதத்தின்
தொலைந்திடாச் சாபந் தொலைத்தாய் சரணம். 2

கருத்துவந் தந்நாட் கடம்பா டவியைத்
திருத்திச் சடைப்பிறைத் திருவமு தொழுக்கி
மதுரா புரியென வையக மெங்குந்
துதிசெயப் புரிந்த சோதியே சரணம். 3

அலகில் கருணை யங்கயற் கண்ணி
மலயத் துவசன் மகளெனத் தோன்றி
வரந்தரு சீர்த்தி மதுரைமா நகரம்
புரந்திடக் கருணை புரிந்தாய் சரணம். 4

வழுதியாய் வந்து மதுரைமா நகரில்
தொழுதகு கயற்கட் டோகையை மணஞ்செய்(து)
அகலிடத் துள்ளோர்க் கறநெறி காட்டிச்
சகமுழு தாண்டசுந் தரனே சரணம். 5

வந்திடு மிரண்டு மாதவர்க் காகச்
சிந்தையு வந்துவி சித்திர மாக
உம்பர்கொண் டாட வுவந்துமுன் வெள்ளி
யம்பலத் தாடிய வரசே சரணம். 6

அம்பிகை யமைத்த வன்னமா மலையும்
வம்புறு கறியின் வகையுமுண் ணென்று
பண்டுதான் வெய்ய பசிக்கனன் மேவிய
குண்டோ தரற்குக் கொடுத்தாய் சரணம். 7

குண்டோ தரன்பசிக் குறைதவி ராதெனக்
கண்டே யுமையுங் கலங்கிவந் துரைக்க
அன்னக் குழியும் வையையா மாறும்
அன்னவற் களித்த வரனே சரணம். 8

வார்கட லேழையு மாமிக் காகச்
சீர்மது ரையில்வரச் செய்தாய் சரணம். 9

வானகத் திருந்த மலையத் துவசன்
கானமர் பூங்குழற் காஞ்சன மாலையாந்
தேவியைத் தேடிச் செகமிசை வந்து
தாவிநீ ராடச் செய்தாய் சரணம். 10

அக்கிர மங்க ளடங்க விவ்வுலகில்
உக்கிர வழுதியை யுதவினய் சரணம். 11

வேல்வளை செண்டென மேவுமுப் பொருளைச்
சால்புற வவற்குத் தந்தாய் சரணம். 12

கடனீர் சுவறக் கதிர்வடி வேலை
விடவருள் புரிந்த விமலா சரணம். 13

மறமுறு மகவான் மணிமுடி சிதறிடத்
திறல்வளை யெறியச் செய்தாய் சரணம். 14

கண்டோர் வெருவக் கனகமா மலையைச்
செண்டா லடிக்கச் செய்தாய் சரணம். 15

கண்ணுவ ராதியாங் கலைபயின் முனிவோர்க்(கு)
எண்ணுறு மறைப்பொரு ளியம்பினய் சரணம். 16

அணியுறு நவமணி யருங்குணங் கூறி
மணிவிலை செய்த வரதா சரணம். 17

வெற்றிசேர் வருணன் விட்டவா ரிதியை
வற்றிடச் செய்த வள்ளால் சரணம். 18

வருண னேவிய மாமுகில் பொழியுந்
தருணமம் மழையைத் தடுத்திடச் சடையில்வாழ்
நான்முகி லேவி நான்மாடக் கூடல்
வான்பெயர் பெறச்செயும் வரதா சரணம். 19

இத்தரை புகழ வெல்லாம் வல்ல
சித்தராய் வந்த சிவமே சரணம். 20

கல்லாற் செய்த கரிசெங் கரும்பை
மெல்லவே செய்த விமலா சரணம். 21

பாண்டிய னிடத்தே பாதக வமணர்
தூண்டிய வேழந் துரத்திவந் திடலும்
படரும்வே ழத்தின்முன் பாங்குறச் சென்றே
யடர்நர சிங்க வம்பினைத் தொடுத்துச்
சாயக் குருதி தான்வழிந் தோடி
மாயச் செய்த மகேசா சரணம். 22

விரதக் கவுரிமுன் விருத்த னாகவும்
வரமுறு பேரெழில் வாலிப னாகவும்
பழகுறு மழலை பயில்வாய்ப் பச்சிளங்
குழவியா கவுருக் கொண்டாய் சரணம். 23

வென்றிவேற் படைக்கை வேந்தனுஞ் செழியன்
வன்றுயர் மாறி மனமிகக் களிக்க
நீடிய மன்றிடை நின்றுகான் மாறி
யாடிய கருணை யையனே சரணம். 24

துத்தியஞ் சேர்குலோத் துங்க நிருபன்
சத்திய முடனரசாட்சிசெய் திடுநாள்
வேதிய னொருவனோர் வேடனை யிவனே
கோதிலென் மனைவியைக் கொன்றன னென்று
வந்து முறையிட மன்னவன் கேட்டுச்
சிந்தையை யுற்றுத் திகைத்திடும் போது
மணமகன் செய்தியால் வரலா றிதுவென
உணர்வுறச் செய்த வுருத்திர சரணம். 25

தந்தையை வதைத்த தனையன் பாதகம்
நைந்திடச் செய்த நாயக சரணம். 26

மங்கை வேண்ட வலியுடைச் சித்தன்
அங்கம் வெட்டிய வாதியே சரணம். 27

அம்மணர்முன் னேவிய வடலா ரரவை
நமனுல கேற்றிய நம்பா சரணம். 28

பாயக் கொடுமை பலசெய வந்த
மாயப் பசுவை வதைத்தாய் சரணம். 29

தொண்டனுக் காகத் துரகத மேறிக்
கொண்டமெய்க் காட்டிய கோவே சரணம். 30

மறையவர் தம்மை மதியா மாறன்
குறையது தவிரக் குடிகளும் பெருக
இலகிய கருணை யின்பம் பெருக்கி
யுலவாக் கிழியை யுதவினாய் சரணம். 31

மின்பயில் வளையல் விலையது பகரும்
இன்புறு வணிக னெனவுருத் தாங்கி
மன்னிய பேரெழில் வாய்ந்தநல் வணிகக்
கன்னியர் கண்டு காதன்மீக் கூரத்
தீதிலாச் செல்வந் திகழ்மது ரைத்திரு
வீதியில் வந்த விமலா சரணம். 32

மட்டவிழ் குழன்மட வாரறு வர்க்கும்
பட்டமங் கைப்பதிப் பாறையி னுருவந்
திட்டமாய் நீங்கத் திருவருள் புரிந்தே
யட்டமா சித்தி யருளினாய் சரணம். 33

சீர்வள வன்றெரி சித்திடச் செய்துபின்
ஏர்விடை யிலச்சினை யிட்டவா சரணம். 34

முன்னர்ப் பெரும்போர் மூண்டவெங் களத்தில்
தென்னவன் சேனைகள் சேர்ந்திளைப் பாறிப்
பருகும் வகைநீர்ப் பந்தல்வைத் தருளிய
திருவருட் கடலாஞ் சிவமே சரணம். 35

பூவணந் தன்னிலோர் பொன்னனை யாண்முன்
கோவண முடையாக் கொண்டு சித்தர்தம்
உருவுடன் வந்தவ ளுள்ளங் களிக்க
இரச வாத மியற்றினுய் சரணம். 36

தொண்டன்மீ னவற்காச் சோழனைத் துரத்தி
வெண்டிரை மடுவில் வீழ்த்தினுய் சரணம். 37

அடியவர் பூசனைக் கனுதின மளித்து
மிடிமிக வடைந்த மேழியன் றனக்குப்
பலமுறு வறுமை பாறும் படிக்கே
புலவாக் கோட்டை யுதவினுய் சரணம். 38

அறமெய் யுருக்கொண் டவதரித் தாற்போற்
பிறவிச் செல்வப் பேர்பெற் றிலங்கும்
வணிகர் தனயன் மாமனு வந்து
தணிவற வழக்குத் தவிர்த்தாய் சரணம். 39

மனமகிழ் வுறவே வரகுணன் றனக்குக்
கனசிவ லோகங் காட்டினுய் சரணம். 40

இந்தனச் சுமையை யெடுத்தணி வீதியில்
வந்துநா னடிமையிம் மாநகர்ப் பாணனுக்(கு)
எனவுரைத் தாங்கே யிருந்திசை பாடியோர்
கனியிசைப் புலவனேக் கங்குலிற் போக்கி
விறற்படை வழுதி வியந்துபா ணனுக்குச்
சிறப்பது செயவருள் செய்தாய் சரணம். 41

பருவர னீங்கப் பாணபத் திரற்குத்
திருமுகங் கொடுத்த சிவனே சரணம். 42

பாடுபா ணற்குப் பலகையோர் பரிசாப்
பீடுற வளித்த பிரானே சரணம். 43

மேதகு வழுதிமுன் விறலி யின்னிசை
வாதுவெல் லச்செய் வரதா சரணம். 44

உசிதமொன் றில்லா துற்பவித் துலகிற்
பசியாற் றவித்துப் பலகா னலைந்த
ஏனக் குருளைகட் கீன்றதா யாகி
ஞானப் பாலை நல்கினுய் சரணம். 45

பன்றியின் குருளையைப் பாண்டியன் றனக்கே
யன்றுமந் திரிக ளாக்கினுய் சரணம். 46

கரிய குருவிக் கரியதோர் மந்திரந்
தெரிய வுபதே சித்தாய் சரணம். 47

இன்புறு தொண்டர்க் கீந்திடு முத்தியை
யன்புறு நாரைக் களித்தாய் சரணம். 48

வங்கிய சேகர வழுதிக் காகப்
பொங்கர வதனுற் பொன்மது ரையினிற்
கோலமோ டெல்லை குறித்துக் காட்டி
பாலவா யாக்கிய வரகர சரணம். 49

வளவனும் வழுதியும் வன்சம ராட
இளமைகொள் வேடனா யேகி மீனவன்
சேமம் நோக்கித் தீட்டிய சுந்தர
நாமத் தம்பை நாட்டினாய் சரணம். 50

சங்கப் புலவர் தம்முடன் றானொரு
துங்கப் புலவனாத் தோன்றியாங் கிருந்து
சாரமுற் றிடுதமிழ்ச் சங்கப் பலகை
சீருட னீந்த செல்வா சரணம். 51

தருமியாம் வேதியன் சந்தத முந்தான்
மருமிகு கமல மலர்த்திரு வடியைப்
பத்தியோ டினிது பணிந்திட முன்னாள்
உத்தம மறைக ளுரைத்தசெவ் வாயாற்
கொங்குதேர் வாழ்க்கைச் செந்தமிழ் கூறித்
தங்குபொற் குவையைத் தருமிக் குதவி
ஆங்கவன் வறுமை யகன்றிடும் வண்ணம்
பாங்குற வருள்செய் பரனே சரணம். 52

கொற்றவ னவையிற் கூறுங் கவிக்குக்
குற்றங் கூறிய குணமுறு கீரனை

எரிநுதற் கண்விழித் தேசினங் கொண்டு
விரிமலர்ப் பொய்கையில் விழச்செய் ததன்பின்
புகழ்பெறு சங்கப் புலவர் யாவருந்
தகவுட னேதுதி தாம்புரிந் திருப்பப்
புரைதவி ரும்படி பொற்றா மரைத்தடக்
கரையேற் றியவருட் கடலே சரணம். 53

பாரிற் கீரன் பலமுறை துதிக்கச்
சீரிய செந்தமிழ் சேரிலக் கணத்தை
அகத்திய முனிவனு லறிவுற வுணர்த்திய
மகத்துவ முடைய மகேசா சரணம். 54

பூர்த்தியாச் சங்கப் புலவர் கலகந்
தீர்த்தருள் பரம சிவமே சரணம். 55

கற்றவர் புகழிடைக் காடன் பிணக்கை
முற்றுறத் தவிர்த்த முதல்வா சரணம். 56

மலையர சன்மகள் வாரிதிப் பாங்கர்
வலைஞர்கோ னுக்கொரு மகளெனத் தோன்ற

மீன்வலை வீசும் வேடந் தாங்கித்
தான்மணஞ் செய்த சம்புவே சரணம். 57

சீதமார் வையைத் திருக்கரை மேவிய
வாதவூர் வந்த மணிவா சகற்குப்
பத்தியாய்ப் பதமலர் பணிந்துபூ சிக்கச்
சித்தர்கள் போற்றுந் திருப்பெருந் துறையிற்
குருந்தடிக் கீழே குருவா யமர்ந்தே
யிருந்துபோ தந்தரு மிறைவா சரணம். 58

மணிவா சகர்பரி வாங்கிடச் சென்று
துணிவாய்த் திருப்பெருந் துறையிடை யிருந்து
நின்றிருப் பணியை நியமமாய்ப் புரிந்தும்
நின்றிரு வடியரை நித்தியந் துதித்தும்
பரிவாங் குதற்குப் பரிவுடன் கொணர்ந்த
உரிமைப் பொருளெலா முவந்தளித் தளித்து
வெறுங்கைய ராக வீற்றிருந் திடலும்
உறுஞ்சினத் துடனு னுதவிய பொருளைத்
தருகென வழுதி தண்டஞ் செய்ய
உருகிநொந் தருங்கவி யுளங்கனிந் துரைக்க

விரகுட னவர்துயர் விலக்குதற் கெண்ணி
நரிபரி யாக்கிய நாயக சரணம். 59

அரிமர்த் தனன்பரி யாவுஞ் சிதையப்
பரிநரி யாக்கிய பதியே சரணம். 60

ஐயராம் வாதவூ ரடிகளுக் காக
வையை பெருகி வரும்படி செய்து
சுந்தரப் பாதஞ் சோர்ந்திட நடந்து
வந்திபிட் டுண்டு மண்ணைச் சுமந்து
செழியன் கையிற் சேர்பொற் பிரம்பால்
அழகார் மேனியி லடியும் பட்டே
அன்னவன் ஞான மடையச் செய்துபின்
நன்னலம் வந்திக்கு நல்கினுய் சரணம். 61

ஞானசம் பந்தர் நண்ணிய திருமடந்
தானழ லூட்டிய சமணர்கள் வருந்தத்
தென்னவ னுடலந் தீச்சுரம் பெருக
மன்னவன் மனைவி மங்கையர்க் கரசியுங்
கூர்மதி யமைச்சர் குலச்சிறை யாரும்

பார்புகழ் ஞானசம் பந்தர்பாற் சென்று
துதிசெய்து வேண்டத் துய்யவெண் ணீற்றுப்
பதிகம் பாடிப் பலமுறை யன்னவர்
பரவக் கருணை பாலித் தரசன்
சுரமுங் கூனுந் தொலைத்தாய் சரணம். 62

பரவுமெய்த் தொண்டர் பவக்கடல் கடந்து
கருதுபே ரின்பக் கரைதனி லேறத்
தண்கழல் பரவாச் சமணர் யாவருந்
திண்கழு வேறச் செய்தாய் சரணம். 63

என்னிடர் தவிர்ப்பா யெனத்துதி புரிந்தவோர்
கன்னியின் பொருட்டுமுன் கரியாய் நின்ற
வன்னியுங் கிணறு மிலிங்கமு மதுரையின்
முன்னுற வரச்செய் மூர்த்தியே சரணம். 64

முனிவரா மெழுவரு முன்னாட் போந்து
புனிதநற் பூசை புரிந்திட வவர்க்கு
வரமிக வுதவியிவ் வையகத் தெவர்க்கும்
அருள்புரிந் துறையு மமலா சரணம்.

பொங்கரா வாரம் புனைந்தசெஞ் சடிலச்
சங்கரா வெனக்குன் சரணமே சரணம்.

திருச்சிற்றம்பலம்.

திருவிளையாடற் சரணமஞ்சரி
முற்றிற்று.

---



